திருவாவடுதுறை யாதீன வெளியீடு - 23.



உ

சிவமயம்



# சதமணிக்கோவை

(பொழிப்புரையுடன்)



சர்வதாரி தை அசுபதி நாள்

1949

திருவாவடுதுறை யாதீன வெளியீடு - 23.

உ

சிவமயம்.

# சந்தமணிக்கோவை

(பொழிப்புரையுடன்)

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து

20-வது குருமகா சந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி,

ஷை ஆதீனத்து வித்துவான்

த. ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையால்

பரிசோதித்துப் பதிப்பிக்கப்பட்டது.




உரிமைப் பதிவு

சர்வதாரி ஆண்டு தைத் திங்கள் அசுபதி நாள்

1949.

உ

சிவமயம்.

# முன்னுரை.

"கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணை
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாயதேவன்
சயிலாதி மரபுடையோன் றிருமரபு
நீடூழி தழைக மாதோ".

[ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள்.]

சதமணிக் கோவை என்னும் இந்நூல் திருக்கயிலாய பரம்பரையில் மெய்கண்டதேவருடைய சந்தானத்திலே வந்த ஆசிரியர் ஒருவரால் அருளிச்செய்யபப்ட்டது என்பதைத்தவிர வேறொன்றும் இப்பொழுது தெளிவாக அறிந்துகொள்ள இயலவில்லை. எனினும், இந்த நூலைப் பல இடங்களிலே இவ்வாதீனத்துக் குல தெய்வமாகக் கொண்டாடப்படும் ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் ஸ்ரீ மெய்கண்டதேவர் அருளிச்செய்த சிவஞான போதத்துக்குத் தாமருளிய திராவிட மாபாடியத்திலே பிரமாணமாக எடுத்தாண்டிருக்கிறார்கள். அன்றியும், இச்சதமணிக்கோவைக்கு இவ்வாதீனத்துப் பெரியோர்கள் ஒரு பொழிப்புரையும் செய்துவைத்துள்ளார்கள். இப் பொழிப்புரை இந்த அரிய நூலுக்குக் கிடையாதாயின் எம்மனோர் தக்கசமாதானம் செய்துகொள்ள அறியாமல் மயங்குவர்.

இனி, இச் சதமணிக்கோவையின்கண் உள்ள செய்யுட்கள் 106. இச் செய்யுட்கள் யாவும் வெண்பா யாப்பானமைந்துள்ளன. ஆற்றொழுக்கான நடையுடையன. ஞானவாணி இவ்வாசிரியருடைய நாவில் நடம்புரிகின்றாள் என்பது இச் செய்யுட்களை ஒருமுறை படித்தோருக்கும் எளிதில் புலப்படும்.

இப்பழைய பொழிப்புரையுடன் கூடிய ஏட்டுச்சுவடி மிக்க திருத்தமுள்ளதாக என்னுடைய தமிழாசிரியர்களுள் ஒருவரும், சிதம்பரம் ஸ்ரீ மீனுட்சி தமிழ்க் காலேஜில் பிரின்ஸ்பாலாகவும், பின்பு அண்ணுமலைப் பல்கலைக்கழகத்திலே தமிழாசிரியராகவும் இருந்து நூற்றுக்கணக்கான நன் மாணவர்களுக்கு ஆதீனத்துக் கல்வியை மிக எளிதாகப் பாடஞ்சொல்லி விளக்கிப் பெரும்புக ழெய்தியவர்களும், திருவாவடுதுறை யாதீனத்து வித்துவாஞக இருந்தவர்களும் ஆகிய ஸ்ரீ சு. பொன்னோதுவா மூர்த்திகள் தமது திருக்கரத்தாலெழுதியதாக இருபது ஆண்டுகட்கு முன்பே கிடைத் துள்ளது. அப்போதே அதனைப்படியெடுத்து வைத்துக்கொண் டேன். பின்பு ஒப்பு நோக்க நேர்ந்தபோது ஒரு பழைய புத்தகப் பிரதி கிடைத்தது. அது இன்னுரால் இன்னகாலத்து அச்சிடப் பெற்றதென விளங்கிக்கொள்ள டைட்டில பேஜ் இல்லை. ஆயினும் நூல் முழுவதுமிருந்தது. பல பாட பேதங்களும் பிழைகளும் மலிந்தனவாகச் செய்யுட்களும் பொழிப்புரைகளும் தென்பட்டன. அச்சிடுவதற்கான முயற்சிகளைப் பலகாலும் செய்தேன். "முனி வரு மன்னரு முன்னுவ பொன்னுன் முடியும்" என்பதற்கேற்ப எளியேனுல் அச்செயல் இயலாததாயிற்று. பொருளாளரும் செயலால் வன்கணாளராயிருந்து வந்தனர். அடியேனும் ஸ்ரீ மெய்கண்டதேவர்பால் குறையிரந்துவந்தேன். திருவருளும் கூட்டிற்று.

அடியேன் இவ்வாதீன கைங்கரியத்தை மேற்கொண்டபின்பு ஆதீனத்துப் புத்தகசாலையில் சதமணிக்கோவைப் பிரதிகள் பல பொழிப்புரையுடன் கிடைத்தன. அவற்றையும் நோக்கித் திருத் தம் செய்துகொண்டேன். இச் செய்திகளையெல்லாம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானத்தில் விண்ணப்பம் செய்த அப்பொழுதே அச்சிடு விக்குமாறு என்னைப் பணித்தார்கள். மற்றும் உள்ள நூல்களையும் விரைவிலே அச்சிட்டு உலகுக்குதவுமாறு கட்டளையுமிட்டார்கள்.

இப்பொழுது இவ்வாதீனத்திலே 20வது மகாசந்நிதானமாக எழுந்தருளியிருந்து குருக்ஷேத்திர பரிபாலனம், சிவக்ஷேத்திர பரி பாலனம், செந்தமிழ்ப் பரிபாலனம், சித்தாந்த சைவ சமய பரி பாலனம் முதலியன செய்தும்; உலகோபகார்மான பல தர்மங்

களையும் அவ்வப்போது மக்களுக்கு வேண்டுவனவாக இன்றியமை யாமை யறிந்து பெரும் பொருளை வாரிவாரி வழங்கிப் பெரும்புகழ் படைத்தும் விளங்குகின்ற **ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக பரமா சாரிய சுவாமிகள்** செய்த இப்பேருபகாரத்தையும் அறிவுடைய உலகம் என்றும் மறவாமல் போற்றும் கடப்பாடுடையது. அவர் களிட்ட கட்டளையைச் சிரமேற்கொண்டு என் சிற்றறிவுக்கு எட்டிய அளவில் இதனைப் பரிசோதித்து முடித்திருக்கிறேன். குணங் கொண்டு கோதாட்டுதல் அறிஞர் கடன்.

திருவாவடுதுறை,
4—2—49.

**த. ச. மீனாட்சி சுந்தரம் பிள்ளை.**
ஆதீன வித்துவான்.

## இனி விரைவில் வெளிவருவன.

**சிவஞானபோத திராவிட மாபாடியம்**
**சிவஞான போத சிந்தனை**
**தணிகைப் புராணவுரை**
**திருவாவடுதுறைப் புராணம்**
**திருவாவடுதுறை யமகவந்தாதி**
**கலைசைச்சிலேடை வெண்பாவுரை முதலியன.**



திருவாவடுதுறை ஆதீனத்தில் 20-வது பட்டத்தை வகித்திருக்கும்
ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண பண்டாரசந்நிதிகள்

௨

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சதமணிக்கோவை.

## (பொழிப்புரையுடன்)

காப்பு.

கண்ணே ருதலிற் கறையைக் களத்தின் மறைத்
தெண்ணமிலா வென்போ லெழுந்தருளும்—வெண்ணெய்
மெய்கண்ட தேவை விஞவெண்பா விற்துமுகங் [நல்லூர்
கைகண்ட தேமிகவுங் காப்பு.

நூலுண்மை (தாரகம்.)

கடாதிகட்குத் தாரகங்க ளேழென்று காட்டில்
விடாதகுய வன்றிரிகை மேன்மண்—கெடாததனைக்
கொள்வோர் வினைகால நாசங் குவலயத்தைச்
செய்வோர்க்கு மிப்படியே செப்பு. 1

விகாரியல வென்றுன்னை மேலோர் விளம்பல்
தகாதுபுயற் சத்தம்போற் சம்பு—விகார
மடாதென்ப தெங்ங னருளாக மங்களெல்லாங்
கடாவிடைக ணீமொழிந்தக் கால். 2

என்பது: சர்வக்கினனுன படியினுலே விகாரதோட மில்லை யென்றது.

வேதம் பதியருளிச் செய்தா னெனவிளம்ப
லோதுவார் தற்புகழ வொண்ணுதாம்—வேத
முனைத்துதிக்கு மாமாகி லுத்தமனே நீயு
முனைத்துதிப்ப தெவ்வா றுரை. 3

என்பது: துதிக்கு முறைமை யான்மாக்களுக்குத் தோன்றுத படியினலே யென்றது.

ஆகமங்க ளெல்லா மொருவ னருளியவென்
றேகையுட னெந்தா யுரைத்தருளிப்—பாகமருந்
தந்திர சாங்கரிய மாகா தெனச்சாற்று
மிந்தவுரை யென்னே வியம்பு. 4

என்பது: தந்திர சாங்கரியங் கிரியா பாதத்திற்கொழிய ஞானபாதத்துக் கில்லை யென்றது.

மனவாக்குக் காய மருவாத வுண்மை
யுனதாகு மென்றுமறை யோது—மெனலாலிம்
மானத்தா லுன்னுண்மை மட்டிடலாமென்னுமது
ஞானத்தா லெங்ஙு னவில். 5

என்பது: வேதவொழுங்கு மிப்படியே. பதிவாக்கியத் தாற் சொல்லு மளவை யொழியப் பசுவாக்கியத்தளவைகளா னியமிக்க வொண்ணு தென்றது.

நூலுண்மை முற்றும்.

---

## புராணம்.

வாரிபுடை சூழும் வசுந்தரைக்கு மன்னியநான்
மேருநடு வாக விளம்பியிட—வோருஞ்
சுழுமுனை நாடியென்று சொல்லுவதொன் றில்லை
பழுதிறிரு வம்பலத்தைப் பார்த்து. 6

என்பது : பூமி கிடையாகையாற் சமனொளி பாதமுந், திருவம்பல நாபியு, மிமவானிதயமு, மகமேரு முடியுமாகப் புராணங்கள் சொல்லுகையா லெப்பூமி நின்றபொழு தடுக்காகை யால் விரோத மில்லை யென்றது.

காமனையு நீமயக்கங் கண்டிடு வையிருக்கக்
காமன் மயக்கினனு கக்கருதிக்—காமனைமு
னீறு விழித்ததுவென் னின்மலனே நின்றனக்கு
மாறுமோ காமன் மதி. 7

என்பது காமனைப் போர்செய்யவரக் காட்டலினவர்கள் வீரமறிகைக்குச் சுட்டதென்றது.

அரக்கன் மலையெடுக்க நொய்தா யதன்மே
லிருக்குமிறை நீங்கா திருக்க—விரக்கமிலா
வீரமுற்ற வெவ்வரக்கன் வெவ்வியவாய் விட்டலறப்
பாரமுற்ற தென்னே பகர். 8

என்பது : இலகிமா, கரிமா சித்திகளாலுந் திருவுள்ள மாறுகையாலும் பாரமாயிற் றென்றது.

(பி—ம்) பாரமுற்ற தெந்தாய் பகர்.

மந்திரக் குற்றமல்ல மாவேள்விக் குற்றமல்ல
தந்திரக் குற்றமல்ல தானையெலாஞ்—சிந்த
மலையரையன் பாவை வரமிரப்பத் தக்கன்
தலையிழந்த குற்றமென்னே சாற்று. 9

என்பது : தருமம் பண்ணுமிடத்துஞ் சிவனை முன்னிட் டுக்கொண்டு செய்யவேண்டு மென்றது.

திரிசுடரு முக்கணெனச் செப்பியிட னல்க
ளெரியிலங்கு வேள்வியினி லெந்தாய்—பரிதியினைக்
கண்பறித்து மங்கியினைக் கைதடிந்தும் பான்மதியைப்
பண்பொழித்த தென்னே பகர். 10

என்பது: திரிசுடருஞ் சாமானியத் திருநயனமென்ற தக்கனவி செய்வித்த வபராதங் கண்டபொழுது முனியப்படு மென்றது.

(பி—ம்) கைதடிந்தும் திங்களினைப்.

ஈசன் குறைவறவே யெவ்விடத்து நிற்பனெனிற்
காசிமுத லாகும் பதிசுதியாப்—பேசியதிங்
கேதோ புராணங்க ளெல்லா மிறைவனே
யீதென்று நாயேற் கியம்பு. 11

என்பது: பசுவின் முலையிலே பால் பலித்தாற்போ லென்றது.

(பி—ம்) மிறைவனே, தீதோவா நாயேற் கியம்பு.

கற்பித்த நாளொழியக் காலனணு காதபடி
கற்பித்தா யெந்தையதி காரத்தைக்—கற்பித்த
வெல்லையென வந்த யமனுயிரை மார்க்கண்டற்
கொல்லை யொழித்ததுவென் னேது. 12

என்பது: காலனும் பெத்தான்மாக்களைத் தண்டிப்ப தொழியச் சரியையாதி நாலுபாதத்திலு நின்றனுட்டிக்கிற் சிவபத்தர்களை நலிய வதிகாரமில்லை யென்றது.

கண்ணப்பர் செங்குருதி மாறுகைக்குக் காளத்திக்
கண்ணப்பா கண்ணப்பக் காண்கையினாற்-கண்ணிரண்டு
மானுட தேகத்தின் மன்னியிடுந் தாதுவென்கொல்
ஞானமயற் குள்ளதுா தா. 13

என்பது: அன்பு சோதிக்க வேண்டுகையா லத்துவா வல்லவன்பாகிய வருளே யென்றது.

விதிப்படியே பூசை விரும்பினவர்க் கன்றி
மதிப்பரிய முத்தி வழங்கா—னதிச்சடையோ
னுடரிய முத்தியினை நாளாறி னண்ணியதென்
வேடரிற்கண்ணப்பன் விரைந்து. 14

என்பது: பத்தியதிசயமுஞ் சிவபுண்ணியத்தின் மிகுதி யும் பண்டைநற் றவமு மென்றது.

இனமலர்கொண் டர்ச்சிக்க வேத்தா திடறும்
பனவனுயிர்ப் பாதகத்தைப் பண்ணிச்—சினமடைய
விட்டார் பெறற்கரிய வீடு விகாரமறக்
கிட்டியதென் னிவ்வுடம்பிற் கே. 15

என்பது: பத்தியதிசயமுஞ் சிவபுண்ணியத்தின் மிகு தியு மென்றது.

திதிகர்த்தா மண்ணிற் செனித்ததுவு மன்றிப்
பதியிழந்து கானிற் படர்ந்து—மதிமயங்கிப்
பொய்மானின் பின்போய்ப் புரிகுழலைப் போக்கினனே
யிம்மாய மென்னே வியம்பு. 16

என்பது: விட்டுணு சகலான்ம வர்க்க மாகையாலென்றது.

மானுடம்பின் மத்தடிபோய் மற்றவர்மேன் மன்னு
தாவமிடற் றுன்முதுகி லந்தடிபோய்—ஞாலமெலாம்
பட்டதுவு மண்சுமந்த போது பரம்பரனே
சுட்டறவே நாயேற்குச் சொல். 17

என்பது: விசுவரூபி சிவனேழிய விட்டுணு வல்ல வென்றது.

அன்னோ தவஞ்செய் தருநூலைக் கேட்டார்கள்
பின்னோர் கொலைசூழ்தல் பித்தாகு—மென்னோ
வசையிலா ஞானத்தை மாயவன்பாற் கேட்ட
விசையன்போர் மேவியதென் மீண்டு. 18

என்பது: அருச்சுனனுக்குச் சொன்ன விட்டுணுகீதை சொல்லவேண்டி மயங்கச் சொன்ன நூலென்றது. யதார்த்த மான நூலல்லவென வறிக.

புராணம் முற்றும்.

---

சரியை.

ஞானாகமங்களெல்லாங் கேட்டருளி நந்தீச
ரானாத முத்தி யடையாமல்—வானோங்கும்
காரார் மிடற்றான் கயிலைமலை காவலனாய்ச்
சாரூபம் பெற்றதுவென் றான். 19

என்பது: உபதேசித்த குரு திருமேனியை யனவரத முந் தெரிசிக்கப் பெறிற் சாயுச்சியமும் வேண்டா மென்றது.

வன்றொண்டர் சம்பந்தர் வாகீசர் மற்றுமுள்ளோர்
பொன்றரிய ஞானம் புகுந்திருக்கச்—சென்று
பதிதோறும் பாடிப் பணியுமதென் மாட
மதிதோ யருட்டுறையாய் வந்து. 20

என்பது: பாடுகின்றதும், பணிகின்றதுஞ் சிவானந் தானுபவமாம். ஞானத்திற் சரியை நேயத் தழுந்த லென்றது.

சரியை முற்றும்.

---

## கிரியை.

பூதசுத்தி செய்யப் புகன்ருய்நின் பூசையினிற்
றீதி றுவாதசாந் தச்சிவனிற்—பேதமறக்
கூட்டுகவென் ருயுயிரைக் கூட்டியபின் பூதசுத்தி
வேட்டவரா ரெந்தாய் விளம்பு. 21

என்பது: ஆன்மா வியாபியாகையாற் பண்ணுவன். இப்பூசை பாவனு மாத்திர மென்றது.

பஞ்சசுத்தி பண்ணிச் சிவபூசை பண்ணவென
விஞ்சுஞா லெல்லாம் விளம்பினுய்—செஞ்சடையா
யீயெறும்பு நாகம் புலியிபமும் பூசிக்க
நேயமுடன் கொண்டதுவென் னீ. 22

என்பது: அவை பூர்வம் விட்டகுறையினுற் சாமுசித்தாகையாற் பஞ்சசுத்தி மானுடருக்குக் கூறினதொழிந்து மற்றுள்ள பிராணிகளுக்குத் தேவையில்லை யென்றது.

மந்திரத்தாற் சுத்தி திரவியமா மென்றதற்பின்
மந்திர சுத்தியினை வாய்மலர்ந்தாய்—மந்திரத்தைச்
சுத்திசெய வேண்டுதலாற் சொல்லரிய மந்திரங்கள்
சுத்திசெய்வ தெந்தாய்நீ சொல். 23

என்பது: அசுத்த மாயா பதார்த்தங்களை சுத்தமாயையிற் ருேன்றிய மந்திரங்களாற் சுத்திபண்ணத் தகுதி யுண்டென்றது.

எங்குமுள னீச னிலிங்கத்தே யெப்பொழுதுந்
தங்குவனென் ருகமங்கள் சாற்றியிட—விங்கெனையா
டேவா விலிங்கத்துச் சிட்டிவழி யேசிவனை
யாவா கனமே னறை. 24

என்பது: சிவ வீக்கமற நின்றானு மக்கினியைச் சோலிப்பித்தாற்போல வாவாகனத்தால் வியாத்திபண்ணி யபி முகஞ் செய்யவேண்டு மென்றது.

முகம்பலவு முள்ளோர்பான் மூதுலகின் முன்ன
முகம்பலவு மொன்றாய் மொழிவர்—முகமைந்தில்
வன்னபே தங்கள் வரலாகா வந்ததிறைக்
கின்னபடி யெந்தா யியம்பு. 25

என்பது: திருமுகங்கள் படிகமாகையாலே திக்குப் பாலகர் நிறங்கள் பிரதிபிம்ப மென்றது.

மானிடர் வேந்தர் விருத்தர் மடமாதர்
தேனிகருஞ் செஞ்சொற் சிறார்கடா—மானனங்க
ளஞ்சுஞ் சதாசிவனுக் கானதுவென் னையமறத்
தஞ்சமருண் மெய்கண்டாய் சாற்று. 26

என்பது: சர்வான் மாக்கண் முகமுஞ் சிவனதிட்டான மென்றது.

நாலுதிசை யும்முனக்கு நல்லமுக மாமவற்றி
லேலுகின்ற பூசை யியற்றும—லால நிழன்
முக்கணப்பா பூசிப்போர் மூன்றுதிசை யும்மொழித்துத்
தெக்கணத்தி லேயிருப்ப தென். 27

என்பது: உத்தர திக்குப் பலத்தையுறு மாகையாலது விசேடமாயிற் றென்றது.

ஐயைந்து மூர்த்த மானுருவே யாயிருக்க
வையை முகன முது செய்யமுது—மெய்யன்பர்க்
காகாது மற்றவர்க ளாமுதல்வர்க் கானதுவும்
யோகா லயனே யுரை. 28

என்பது: போசன காலத்திலே பெலியிட வேண்டுகை யாலு, மான்மபோத மறுசுவைகளையு மருந்துகையாலும், மல சலங்களாகையாலும், பிதிர்ப்பலியிட வேண்டுகையாலு நின் மாலியங் தவிர வேண்டிற் றென்றது.

பூசை முற்றும்.

---

## தாரர் பூருவம்

காயமுட னாவி பொருளுங் கடவுளே
தோயமுட னேகொடுக்கச் சொல்லியதென்—னேயுந்
தனது பொருள்கொடுக்கை தன்மமிவை முன்ன
முனதோ வெனதோ வுரை. 29

என்பது: மலந்தீரக் கொடுத்த மருந்தை மலந்தீர்ந்த வுடனே பரிகாரியாகிய சிவன் கையிற் கொடுத்துத் தானு மடிமை யாம். ஆன்மா வனுதியாகையாற் பொருளுட லாவி மூன்று மிவனுக்குள்ள தென்றது.

காய மெனதுயிரென் கைப்பொருளு மப்பொழுதே
தோயமுட னின்பாற் றொகுத்திருக்க—நாயகனே
பூசை செபமோமம் பூசீ ருடனளிக்கப்
பேசியதென் னாடோறும் பின். 30

என்பது: அடிமை தேடினபொருள் ஆண்டவன் கையிற் கொடுப்பதுபோலவுங், கிரியாபாதத்திலே சொல்லுகையாலும், வாதனையா லுனது பற்றுவகையாலும், பலமதிக மாகையாலும் வேண்டுமென்றது.

பொருளுடம் பாவியினைப் புண்ணியனுக் கீய
வருளினாய் வெண்ணை யரசே—யருளதனை
யேய்ந்த விரண்டினையு மீதலா லென்றனையு
மீய்ந்தபடி யெவ்வா றிசை. 31

என்பது: எப்பொழுது மடிமை யாகையா லடிமை மறந்து நின்றவன் பழைய வடிமையானதென வறிந்துதான் றனித்து நிற்க வென்றது.

தாரா பூருவம் முற்றும்.

---

## போக விழிவு.

மாலாதி வாழ்வு மருவுகன வென்றுபல
நூலா லறிந்தும்வினை நோக்கிவரு—காலானே
பொல்லாத வின்பம் புலையேன் புரியுமதெ
னில்லா வுடம்பெடுத்து நின்று. 32

என்பது: அசத்தென் றறிந்த விடத்திலும் பிராரத்தம் வாதனை யென்றது.

(பி - ம்) பொல்லாத வின்பப் புலையை விரும்புமதென்.

நயக்கும்விட யங்தோறு நான்மயங்கிச் சுற்றி
வியக்குமரு ளால்விழிக்க வென்னிற்—கயத்தான
மாகாதோ வம்மா லளவில்பல வித்தாகிப்
போகாதோ வெந்தாய் புகல். 33

என்பது: ஞானதிட்டம் பெற்றவர்க்கொழியும். மற்றவர்களுக்கு வித்தாகி யேறுமென வறிக வென்றது.

போக விழிவு முற்றும்.

---

## சிருட்டி

கன்மஞ் சடமலங்கள் கூடுங் கருத்தில்லை
நின்மலனுங் கூட்ட நினைந்திடான்—மன்னுயிர்க
டாமா யுடம்பெடுக்குந் தன்மையிலை யெவ்வாறு
கோனேயுடல் பெடுத்தம் கூறு 34

என்பது: ஆன்மாவுக் குடம்பு சகச மலத்தினாலே யுண்டா மென்றது.

காரணத்திற் றோன்றுமுறை காரியங்க ளுண்டாமென்
றாரணங்க ளோது மதுவொழியப்—பூரணனே
வந்தபடி யேன்மாதா வின்றிக் கராவின்வாய்
மைந்தனும்பூம் பாவையுமிம் மண். 35

என்பது: சிருட்டி, சந்நிதி மனவாக்குக் காய மென்னு நாலுவித மாகையினாலே யிது வாக்கினது சிருட்டி யென்றது.

நாணும் பெண் ணின்றியா ணுடலுள தாகாதிங்
காணும்பெண் ணின்றியுள தாகாது—தாணுவே
மாற்றரிய கேவலத்தின் மன்னு முயிர்க்குடம்பு
தோற்றுவித்த தெவ்வாறு சொல். 36

என்பது: கேவலத்திலுங் கன்மமே காரணமாக ஆண் பெண்ணாக வகுப்புண் டென்றது.

மூன்றுதிறத் தார்க்குமல மூன்றிரண்டொன் றுப்மொழிந்தாய்
என்றவினை மாயை யிலாதவர்க்குத்—தோன்றுவதுந்
துக்கசுக முற்றதுவு மற்றுந் தொழின்மூன்றுந்
தக்க வருட்டுறையாய் சாற்று. 37

என்பது: மூன்று திறத்தார்க்கும் பஞ்ச மலங்களு மொத்திருக்குமிடத்து மேறக்குறையச் சொன்னது கன்மமு மகாமாயையு மவர்களே வாதியா வென்றது.

(பி - ம்) தொக்க வருட்டுறையாய் சொல்.

சிருட்டி முற்றும்.

---

## பூத தெரிசனம்

பூதங்கண் மாறுபட்டுத் தம்மிற் பொருந்தாமை
வேதங்க ளோதியிட வேண்டுமோ—நாதனே
நாட்டியபே ரன்பிலா நாயேற் குடம்பாகக்
கூட்டியதென் மெய்கண்டாய் கூறு. 38

என்பது: பஞ்சீகரண விதியையும், பஞ்சீகரித்த விதியையும் பார்க்கத் தெரியும் என்றது. இனி, 'பஞ்சகிருத்திய விதியைப் பார்க்கத் தெரியும் என்றது' என்பதோர் பிரதி.

அன்னமெனி னூளும் வளருமைம் பூதமவை
பின்னமெனின் மாயை பிறங்கருவ—முன்னமே
யிந்திரிய மென்னின் மாத்துளூமென் னிவ்வுடலம்
வந்தபடி யெந்தாய் மதி. 39

என்பது: இங்ஙனங் கூறப்பட்ட பதார்த்தங்க ளெல்லாங் கூடி யென்றது.

சத்தாதி யிற்றோன்றும் பூதாதி தானென்றாய்ச்
சத்தாதி பூதத்தே சாருமெனி—லெத்தாலே
காரணத்தைக் காரியத்தின் றன்குணமாய்க் கற்பித்தல்
பூரணமெய் கண்டாய் புகல் 40

என்பது: காரணங் காரியத்தை விட்டிரா தென்றது.

மண்ணும் புனலு மனலுமலை மாருதமும்
விண்ணுமிவ்வ யொவ்வொன்றின் மேலானல்—விண்ணின்று
மண்மாரி வந்தபடி வாய்மலராய் வல்வினையேன்
கண்மாரி செய்தாய் கலந்து. 41

என்பது: பிரமாண்ட மளவும் பிருதிவிக்கு வியாத்தி யென்றது.

ஐயநெடுங் கால நிரயத் தழுந்தினல்
வெய்யவுயிர் தூலவுடல் விட்டுவிடு—மெய்கண்டாய்
சூக்கவுட றுன்பமுறு மென்னிலதிற் ரேயாது
தாக்கியதங் கெவ்வுடலிற் ருன் 42

என்பது: தூல சூக்கும சரீரமல பூததேகமான யாதனு சரீர மென்றது.

பூத தெரிசன முற்றும்.

---

## காலந் திக்கு

பதார்த்த வியல்பின்றிப் படைத்தழித்துக் காக்கை
யெதார்த்தமோ காலமுள தென்னின்—மதார்த்தவனே
யாலமிலாக் கண்டா வருள்வெண்ணே மெய்த்தேவே
காலமென்ப துண்டாகிற் காட்டு. 43

என்பது: வித்து நிலமு நீருங்கூடி யுண்டாகிலுங் கால மும் கூடினு லொழியப் பலியா தென்றது.

வடக்குத்தெற் கென்னு மொருவன்ரு னன்றே
குடக்கைக் கிழக்கென்று கூறும்—கடைப்புலேயே
ஞலுதிசை யீதென்று நாடரிதா நன்ருக
வேலுறவே யெந்தா யியம்பு. 44

என்பது: மாமேரு நடுவாகச் செய்யினல்லது திக்குண் டாகா வென்றது.

காலந்திக்கு முற்றும்.

---

## தத்துவம்.

பாரிற் கடங்கள் பலவொடுங்குங் காரணம்போற்
காரியமாந் தத்துவங்கள் காரணத்தே—சேருமெனின்
மெய்கண்ட தேவனே வெண்ணெவரு வித்தகா
பொய்யென்ற தெத்தை புகல். 45

என்பது: பொய்யென்ற ததுவில்லாத பதார்த்தமாகிய காரியத்தைக் காரணத்திலே யொடுக்கினு லிவனுக்குப் பிரயோசனமில்லையாகையாலிதுவும் பொய் யென்றது.

தாவிலா மூவர்களுந் தத்துவமா கிற்சடமா
மேவரிய விந்தழியும் வட்டமெனிற்—றேவனே
சத்தமெனி னுதம் விடயமாத் தானழியு
நித்தமென்ப தெவ்வாறு நீ. 46

என்பது: அசுத்த மாயா காரியம் போலச் சடமல்லவாகையாலுங் காலத்தைக் கடந்த தாகையாலு நித்தமென்றது.

தத்துவ முற்றும்.

---

## கன்மம்.

ஒன்றுபோன் றுென்றிரா தத்துவாவி னுண்மைதான்
துன்று மலந்துரந்த சோதியே—யொன்றி
மிடைந்த விருவினையும் வேறுபடா தாறி
லடைந்தபடி யெவ்வா றருள். 47

என்பது: அத்துவாவே யிவனுக் குடம்பாகையாற்றுேன்றின விடத்திலே கிடக்கு மென்றது.

ஆறத்து வாவி லடையும்வினை யென்றுரைத்தாய்
ஆறத்து வாவை யருளினுய்—கூறிட்டுச்
சோதித்த பின்னுந் தனுமுதலுந் தொல்வினையும்
பேதிப்ப தெவ்வாறு பேசு. 48

என்பது: தீட்சை அசத்தியோ நிருவாண மாகையாலே தேக முள்ளளவும் கன்மவாதனை போகா தென்றது. அல்லாமலும், சுகதுக்கங்களிலே அழுந்தாத தெப்படி யென்னிற் புளியம் பழமுந் தோடும்போலமென வறிக.

ஒன்றினு லொன்றழியா தென்றுரைத்தி மற்றந்த
வொன்றினு லொன்றழியு மென்றவுரை—பொன்றுமற்
கன்மத்தின் றன்பகுதி காட்டாய் கருணையுரு
வென்னுமெய்த் தேவே யெனக்கு. 49

என்பது: கோவதை பண்ணின பாவம் எக்ஞம் பண்ணிஞற் போகா தென்றும், பதிநூல் விதித்த பிராயச்சித்தஞ் செய்யப்போமென்றுஞ் சொல்லிய தென்றது.

திருவருளி னுலொன்றுந் தீக்கையினு லொன்றும்
உருவிகற்ப மானவற்றி லொன்று—மருவி
யேமையாளுந் தேவே வினைமூன்று மேகிற்
சமையாசா ரம்மெனக்கென் றூன். 50

என்பது: பிராரத்த கன்மங்கள் குன்றவென்றது.

உள்ளதே யாகி லொருவழியா லூட்டுவிப்பை
யில்லதே யாகில்வந் தெய்தாதே—நல்ல
வுறவே திருவெண்ணெ யுத்தமனே யத்தா
துறவேது சொல்லாய் துணிந்து. 51

என்பது: மிருகம், பட்சிகளுக் கொழியவிட வேண்டுமென்றது. விட்டால், வினை தொடர்ந்து புசிப்பியா தென்றுஞ் சொன்னது.

சமுதையெறும் பிக்குப் பிராயச்சித் தத்தை
யமையடைவே செய்யென் றறைந்தாய்—இமையோர்
நசிக்கவரு நஞ்சுண்ட நாதாயா கத்திற்
பசுக்கொலையேன் சொன்னுய் பகர். 52

என்பது: பதிவாக்கியத் தாற்செய்த கொலையாகை யாலும், அவனை முன்னிட்டவிப்பாகங் கொடுக்கையாலும் அவன் பயன் கொடுப்பா னுகையாலுங் கொலையன் றென்றது

ஞானத்தால் வீடென்று நாட்டியபின் னன்முத்தி
யீனமிலாத் தீக்கையினு லென்பதுவென்—மோன
மொழியா யொழியாவென் முன்னைவினை மாய்த்த
விழியாய்மெய் கண்டாய் விளம்பு. 53

என்பது: கிரியாதீட்சை பண்ணினுலொழிய ஞான முண் டாகா தென்றது.

யாதொன் றசையி லிறையருளி னலசைவென்
றோதுகின்ற வேதத்தி னுண்மைக்குப்—போதுமோ
முத்த ருடற்கமைத்த முன்னைவினை தானிருக்கச்
சித்தமொருக் கென்றிறைசெப் பல். 54

என்பது: சமாதியடைந்தவர் கருத்தசைந்தாலும் விறுத் தினுல் நிற்கு மென்றது.

வயுங் கரும மிதமகித மென்றிரண்டா
மாயையொரு நாலாக மன்னியிடுங்—காயத்திற்
றெல்லை யிருவினையோ போகமோ துய்த்தலுயிர்
எல்லையின்மெய் கண்டா யியம்பு. 55

என்பது: கன்மத்துக் கீடான போகத்தைப் புசித்தா னென்றது.

முகவுரைகள் வேற்றுமைக்கு முன்னேவினை யேது
தகும்வினைக ளேதெத் தனைதான்—புகலகின்ற
பெண்ணு ணிருதிறத்தார்க் குண்டாகும் பெண்ணைசூழ்
வெண்ணெயின்மேய் கண்டாய் விளபபு. 56

என்பது: முகமு முரையும் வேறுபடாதபோது ஸ்திரீ புருடர்கள் தம்மின் மயங்கியும், அதுவன்றியும் அவனவ னுச் சிரமமயங்கிற் பட்சி மிருகம் போலே பாவமொழியப் புண்ணிய மேரு தென்றது.

வாகட தந்திரத்தின் கன்மயோ கத்தின்வழி
நேர்பட நின்றவர்க்கு நீட்டிக்கு—மாகவ
கருமத் தளவென்று கற்பித்த தென்னே
பெருநூலிற் சொன்னவா பேசு. 57

என்பது: ஊழளவிலே நிறுத்து மென்றது.

கன்ம முற்றும்.

---

## மாயை.

அருவாகு மாயை யுருவே லழியு
முருவாகுங் காரியமுண் டாகைக்—கொருகா
ரணம்வேண்டு மாகையாற் காரண னேகா
ரணமீது தானென் றிசை. 58

என்பது: மாயை யொழியவுஞ் சத்தாதியும் பிரகிருதியுங் கலையு முபாதானத்திரய முண்டென்றது.

அந்தமுறுங் காரியங்கள் காரணத்தி லேயன்றி
நந்தலுறு தென்னுமதென் ஞானசம்—பந்தன்
திருமணத்திற் சென்றவர்க டேசிகனே தெய்வப்
பெருமணத்திற் புக்கதுவென் பேசு. 59

என்பது: அவர்க டேகமடங்கலுங் கற்பூர தீபம்போலே யான தென்றது.

காயந் தனையன்றிக் கன்மமுள தாகாது
மாயைவினை யின்றியுடல் வாராதிங்—காயுமறி
வெந்தையே யெண்ணை யிறையவனே மற்றிவற்றின்
முந்தையதங் கேதோ மொழி. 60

என்பது: இரண்டும் பசுவி னிரண்டு கொம்புபோலே புராதனமாய்ப் பிறந்தன வென்றது.

மாயை முற்றும்.

---

## ஆணவ மலம்.

சுடரா லிருடேடச் சொல்லார்க ளேந்தாய்
சுடரா லிருடேடச் சொன்னாய்—சுடர்கின்ற
ஞானத்தா லாணவத்தை நாடரிது நாடுவதென்
ஞானத்தா லாணவத்தை நான். 61

என்பது: அருளு மாணவ மலமுஞ் சுடருமிருளும் போலல்ல. ஆணவ மலமில்லாமற் செனன முண்டாகா தென்றது, இது அனுமானக்காட்சி யென்றது.

மூலமல மென்று மழியா முதலாமென்
றூல நிழற்கடவு ளென்றறைய—ஞாலத்தே
யாதித்தன் சந்நிதியி லந்தகா ரம்போல
வோதிற்றென் மெய்கண்டா யுற்று. 62

என்பது: ஆதித்தன் விளக்கந்தானே யிருணிலை யென்றது.

ஆணவமல முற்றும்.

---

## திரோதானம்.

பஞ்சசத்தி தன்னிற் பரனருளைப் பண்டிதர்கள்
சிந்திப் பரிய செழுஞ்சுடரை—யெஞ்சா
வலகி லுயிர்க்குணர்வை யானந்த வாழ்வை
மலமென்ப தெவ்வாறு மன். 63

என்பது: மாதாவானவள் கண்ணை மறையாதபோது பிள்ளையானது மருந்தருந்தா தென்றது.

திரோதானம் முற்றும்.

---

## சத்திநிபாதம்.

அருளையொழிந் தொன்று மறியா துயிர்க
ளருளைப் பொருட்கு மதிட்டான—மருளேகின்
றெச்செயலுஞ் செய்ய வெழில்வெண்ணெ மெய்கண்டாய்
சத்தினிபா தம்மெனக்கென் றான். 64

என்பது: இராசாக்கினை யெல்லார்க்கு மொத்திருக்கை கையிலேயுங் கோபப் பிரியங்க ளுண்டான போது விசேடித் திராசாக்கினை யுண்டா மென்றது.

முற்பிற்பா டின்றி முளையா திருவினையு
மற்பமணர் கூடலிலே யாய்ந்த—நற்செழிய
னின்பத்துன் பங்க ளிரண்டுமொரு காலத்தே
முன்புற்ற தெந்தாய் மொழி. 65

(பி - ம்) மற்பமணர் கூனிலை யாவான.

என்பது: பரமாசாரிய னெழுந்தருளினது தானேயிரு வினையொப் பென்றது.

சத்திநிபா தந்தான் சகலமுமே யொத்திருக்க
முத்திவிருப் பெய்தா முறைமைதா—னெத்தாலே
வெண்ணெய்ப் பதிதிகழு மெய்கண்ட தேவேதண்
பெண்ணைக் கதிபதியே பேசு. 66

என்பது: பராசத்தி பதியாத படியினாலே மோட்சத்திலே விருப்ப மிகவு முண்டாகிற் றில்லை யென்றது.

பருவத்தை நாடியதென் பாசஞ் சடங்க
ளருளுமரு ளோரியல்பே யாகும்—தெருளாத
மக்க ளுயிர்க்கிளமை மூப்பில்லை மெய்கண்டாய்
பக்குவமே துக்குப் பகர். 67

என்பது: பதார்த்த மெல்லாத்துக்கும் பக்குவம் வேண்டுமென்றது.

தன்னைநிக ரில்லாத சத்திநிபா தந்தானோ
மன்னுமல பாகமோ மாந்தர்க்கு—முன்னமே
யுண்டான தேதென் றுரையா யெனையடிமை
கொண்டாய்மெய் கண்டாய் குறித்து. 68

என்பது: முற்பிற்பாடில்லை யென்றது.

எண்ணெப்பா லொப்போ வியற்றியநா ளாலொப்போ
வண்ண லருள்விரவி லொப்பாமோ—திண்ணமுற
வத்துவா வாறி லடைந்த விருவினையு
மொத்தபடி யெந்தா யுரை. 69

என்பது: விரைவி லோடுவானுக்குக் கவர்த்தவழி யெதிருறிற் றிகைப்புற்றாற்போல விருவினை யொத்த வெல்லையில் ஞானதாக முண்டா மென்றது.

சத்திநிபாத முற்றும்.

---

## அவத்தை.

நிலவு சகலத்தி னின்றபூ தாதி
கலாதி சிவாதி கழித்துக்—குலாவியநால்
வாட்டிய சாக்கிரத்தின் வாயுவச னாதிகளைக்
கூட்டியதென் மெய்கண்டாய் கூறு. 70

என்பது: இதமகிதம் புசிப்பற்றபடியா லென்றது.

சாக்கிரத்தி லுள்ள கருவிகளுந் தானில்லை
தூக்கரிய சொப்பனத்திற் றுக்கசுகந்—தாக்குஞ்
சகல வவத்தைபோற் றுக்கியதங் கேதோ
விகலறமெய் கண்டாய் விளம்பு. 71

என்பது: சொப்பனத்தினு முண்டாகா முறைமை யுண்டா மென்றது.

தத்துவங்கள் சற்றுஞ் சலியா வதீதத்தே
யொத்தறியா வான்மா வொடுங்கிடவு—மொத்த
சகல வவத்தைபோற் பிராணன் சலித்த
திகலறமெய்த் தேவே யியம்பு. 72

என்பது: பிராணவாயு வுடலுக்குக் காவ லென்றது.

கண்ட கனவை மறந்து மறவாதுங்
கண்டபடி யேயுரைக்கக் காரணமென்—கொண்டலணி
தேமாம் பொழில்வெண்ணைத் தேசிகா நேசியா
யாமா றடியேற் கருள். 73

என்பது: சொப்பனத்தி னின்றுஞ் சுழுத்தியிலே போகையாலுஞ், சொப்பனத்தி னின்றுஞ் சாக்கிரத்திலே வருகையாலு முளதாகு மென்றது.

அவத்தையடை யுங்கா லவையறிய லாகா
வவத்தையி னைம்புலங்க ளாவ—னவத்தையைநின்
போதமுட னின்றறிவ னென்னிற் பொருந்தியிடா
தேதிடமெய் கண்டா யியம்பு. 74

என்பது: சுத்த தத்துவங்களைக் கொண்டறிவ னென்றது.

அறியு மிடஞ்சகல மாகுமனம் பற்றி
யறியா விடங்கே வலமா—மறியு
மறிவழியின் ஞேய மறிவரிதா மத்தா
வறியும்வகை யெவ்வா றருள். 75

என்பது: ஆன்மா வநாதியே கிஞ்சிக்ஞ ளுகையா லான்ம போத நித்திய மென்றது.

அவத்தை முற்றும்.

---

## ஆன்ம தெரிசனம்

என்னை யறிய விரண்டா யிடுவேனென்
றன்னையறி யேனேற் சடமாவேன்—முன்னவனே
யெவ்வாறுங் காண்கைக் கரிதே லிலதாவ
னெவ்வாறு காண்பே னெனை. 76

என்பது: இப்படி யறியாமன் மயங்குகையாற் பாரிசேடப் பிரமாணங் கொண்டறிய வேண்டு மென்றது.

உனக்கு மெனக்கு முளதாகு முண்மை
யெனக்கு முனக்கும்வே றில்லை—யெனைத்து
முனைமறைப்ப தின்றி யொழியாமற் பாச
மெனைமறைத்தன் மெய்கண்டா யென். 77

என்பது: வாரிநீரி லுப்புப்போ லென்றது.

பூரணமே யாகிலுயிர் போக்குவரத் தில்லையா
மோரிடத்தே யாகிலசத் தாயொழியு—மோரிரண்டு
மோது முயிர்க்குளதே லோரிரண்டு மில்லையா
மீதுயிரி னுண்மையெந்தா யென். 78

என்பது: பதியினுடைய வியாத்தியும், பாசத்தினுடைய வேகதேசமு மில்லாததே வுயிரினுண்மை யென்றது.

ஆனை யெறும்பி லுறுமகத் தான்மாவு
மீனமி லிந்தனமேற் றக்குறைவான்—மானுமெரி
தன்னுண்மை யெண்ணிற் சடமா மருட்டுறையா
யென்னுண்மை யெந்தா யியம்பு. 79

என்பது: சட பாவமொழிய வெரியின்றன்மைக் கொக்கு மென்றது.

அன்னை யுதரத் தறிவிங் கவதரித்துப்
பின்னை யிழந்து பெரியோரா—னன்னூலை
யோதியுங் கேட்டு முணர்வு பெறற்கருமைக்
கேதுவினை யெந்தா யியம்பு. 80

என்பது: அத்துவா சோதனையில் ஞானமொழிய நின்றது நிலையற்ற ஞான மென்றது.

எண்ணி லுயிர்க்குமல மேற்றக் குறைவில்லை
யெண்ணிலுயிர் வீட்டின்ப மெய்தியிட—வெண்ணிலுயி
ரெண்ணிறந்த கால மிறந்து பிறந்திளைக்கப்
பண்ணியதே னெந்தாய் பகர். 81

என்பது: அருட்டெரிசன மானூர்க்கொழியக் காலமு மீட்டிப்பும் வருத்தமுந் தோன்று தென்றது.

முத்தன் பிறவான் முதல்வனுன் மாவாகான்
பெத்த வணுவி லணுப்பிறவா—குத்திரம்போ
லில்லாத துண்டாகா தென்பை கிருத்தியங்க
டொல்லோர் நடத்தியதென் சொல். 82

என்பது: ஆன்மாக்க ளளவிறந்த தென்றது.

ஒருகத்துக் கோருயிர்வீ டுற்றமுயிர் நித்தமெனிற்
சீரைந் தொழிலுஞ் சிதையவரும்—பாரி
லலையாத மெய்கண்ட தேவனே யான்மாத்
தொலையாத தெப்படியோ சொல். 83

என்பது: பதி பசு பாச மூன்றுக்கு மந்தமில்லை யென்றது.

ஆன்ம தெரிசன முற்றும்.

---

## கர்த்துரு பாவம்

ஓரம் புடன்விற்கை யுற்றதுவு மெய்ஞ்ஞான
வீரன்கை யில்லெரியால் வெந்ததுவுங்—காரவுண
ரெல்லாரும் வேவ வெரிமூவ ருய்ந்ததுவுஞ்
சொல்லாய் மெய் கண்டாய் துணிந்து. 84

என்பது: சகல தேவதைகளுஞ் சிவனுடைய வசமென்பதுவு மவனினைத்த வண்ண முடியு மாகையா லென்றது.

நகையி னுதையி னகத்தினய னத்திற்
பகைதணிக்க வல்ல பரனே—தொகையின்
மழுமுதலா மாயுதங்கண் மன்னுயிர்கள் போலக்
கெழுவுவதெ னின்கரத்துக் கே. 85

என்பது: ஆயுத ரூபங்களா யிருக்கையிற் றியானம் பண்ண வதிகமான புண்ணிய முண்டென்றது.

பெண்பா லுகந்த பெரும்பித்த னுயிருக்கக்
கண்பாவு நெற்றிக் கடவுளே—மண்பா
லொருங்கே விரையத் துறந்தோர்த முள்ளம்
பெரும்பயனீ யென்பதுவென் பேசு. 86

என்பது: விசுவ நிமித்தமாகச் செய்தயொழியக் கடவுளுக்கு விடயமில்லை யென்றது.

சிந்தா மணிசங்குந் தேனுவுந் தாமரையு
மைந்தருவு முன்னதே யாயிருக்க—வெந்தோதான்
கச்சவிட முண்டிருண்ட கண்டா கடைதோறும்
பிச்சையிரந் துண்டதுவென் பேசு. 87

என்பது: கடவுள் போகியல்ல வென்றது.

இழிந்தோர்கள் கூத்தாட வேதுவா யெங்கு
முயர்ந்தோர்க ளுணக்கி யுவப்பாத்—தொழுந்தேவே
பேய்ப்பாடல் கேட்டுப் பெரிய பிணக்காட்டில்
கூத்தாட லென்னோ குறித்து. 88

என்பது: வருணாச்சிரம மில்லாத சுவேச்சா வொழுக்க மென்றது.

அந்தரத்தே வந்துலவு மாகித் தருக்கமரர்க்
கிந்திரர்க்குஞ் சோமற்கும் யாவர்க்கு—மெந்தை
கடகரியுந் தேரும் பரிமாவுங் கற்பித்
திடபமுவந் தேறியவா றென். 89

என்பது: இதுவுங் கடவுள் போகியல்லாத படியாலே இடபந் தன்ம சொரூபமாகையாற் றன்மத்தை முன்னிட்டுக் கொண்டது மதுவே வாகன மென்றது.

நிற்கவிடம் போதாது நின்னுடைய பூரணத்துக்
கொற்கமிலாத் தேவர்முத லோர்காணப்-பொற்பொதுவி
லாடியதென் றாதா யலமந்த தென்கடுகி
யோடியதென் பன்றியின்பி னூற்று. 90

என்பது: சமுத்திரத்திற்கு நீரோட்டமுஞ் சுழியு முண்டானாற் போல வென்றது.

கர்த்துருபாவ முற்றும்.

---

## உண்மை நிலை

திருவாதவூரற்குச் செப்பரிய முத்தி
யொருவா சகத்தா லுணர்த்திக்—குருவாகுந்
தேவா மறையுஞ் சிவாகமமு மற்றுமுள்ள
மூவாறுஞ் சொன்னதுவென் முன். 91

என்பது: முன் சொன்னாற் போலோதி யுணர்ந்தவர்க் கொழியத் தத்துவமசி, அத்துவித மென்கிற சொற்களைப் பிறர்க்குணர்த்தலாகா தென்றது.

முத்தொழிற்கு மும்மூர்த் திகளா யினையென்று
மத்தி யிடைத்துயின்ற நாரணனு—மொத்தறியாப்
பண்பொடுநின் றனையென்று மாறு படப்பதிகஞ்
சண்பையிறை சாற்றியதென் றுன். 92

என்பது: சுத்த தத்துவங்களுக்குப் பிரம, விட்டுணுக்க ளுடைய வான்ம சைதன்னிய மொக்கு மென்றது.

பார்பத மண்ட மனைத்தும் படர்ந்தாயென்
றூர்வமுடன் வாதவூ ரானருளென்—றோர்வரிய
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகை
யண்ணா வுனதருளா மால் 93

என்பது: ஆன்மா முப்பத்தாறு தத்துவமாய் நின்று னுயினு மவையிற்றுக்கு வேறானாற்போல வென்றது.

படைப்புந் திதிப்பும் பரனேமற் றெல்லாந்
துடைப்பு முனதே தொழிலாங்—கடைப்புலையேற்
கெல்லா வுயிரை யிரட்சித் தலுமற்றைக்
கொல்லா மையுங்கூறல் கூறு. 94

என்பது: தன்னின் மெலியார்க்கும் மூன்று தொழில் களுஞ் செய்க வென்றது.

ஆறுசம யத்தவர்க்கு மாருணீ செய்வையெனக்
கூறுகின்ற வேதமொழி குன்ருதோ—மாறிலாச்
சித்தாந்தத் தன்றிச் சிவகதிமற் றில்லையென
வத்தா வெனைவிருத்த லால். 95

என்பது: உட்சமயத்தார்க்குக் கிரமத்திலே முத்தி யொழிய வெடுத்த தேகத்திலே சாயுச்சியமில்லை யென்றது.

ஓதொன்றை யொன்றென் றுரைத்தல்சிறப் புண்டாகாப்
பேதத்துக் கத்துவிதப் பேறில்லை—காதனே
யற்புற் றருமறைக ளத்துவித மென்றறையுஞ்
சொற்குப் பொருளேது சொல். 96

என்பது: அநந்ய மென்றது.

எல்லாச் செயலு மிறைசெயலே யென்பதுவு
மெல்லாச் செயலு மிறைசெயலாய்ச்—சொல்லாது
மெப்படியோ வென்னு மெனதையந் தீரவினி
யிப்படியே யென்னு யிறை. 97

என்பது: நூல் சொன்னபடியே செய்தவிறைசெய லது செய்யாது தவிர்த விறைவன் செயலல்ல வென்றது.

ஞான மொடுஞேய ஞாதுருவு மாயுணரி
லீனமாய் ஞேயமிறந்துவிடு—மான்மாவு
மின்றி யுணருமவர்க் கேது மறிவரிதாய்
நின்றறிவ தெந்தாய் நிகழ்த்து. 98

என்பது: பசுகரண மாறிச் சிவகரணமாய் நின்றறிக வென்றது.

பாச மடுத்தாற் றெரியா பதியுண்மை
யீச னடுத்திடினு மிவ்வியல்பே—பாசத்தி
னுண்மை பதியுண்மை யுணரும் வகையுணர்த்தாய்
வெண்ணெயின்மெய் கண்டாய் விரைந்து. 99

என்பது: சீவன் முத்தருக்கொழிய வுணருமுறைமை தெரியா தென்றது.

சென்றணையி லேகதே சந்தான் சிவமாகு
மன்றிநிறை வென்னி லரனடியைக்—குன்றுமற்
கூடவென்னுஞ் சொல்லில்லை யாகும் குருபரனே
நாடியுன துண்மை நவில். 100

என்பது: கண் படலநீங்குமதொழிந்து பிரகாசம் வந்து கூடவேண்டுவதில்லை யென்றது.

ஓரிருபத் தஞ்சாக வுள்ள வடிவதனை
யாரணங்க ளெல்லா மறுதியிடப்—பாரதனில்
வேதியனாய் வேடனாய் மேனி பலகொண்டு
போதுவதெ னெந்தாய் புகல். 101

என்பது: சுவேச்சையாலே வேண்டின திருமேனியை யெடுத்துக் கொள்வ தென்றது.

சைவ நெறியே தலைமையாய்ச் சாற்றியபின்
னையனே நீநா ரணனங்கள்—துய்யபொடி
யென்பு தலைமாலை மயிர்க்கயிறு கட்டங்க
முன்பணிந்த தென்னோ மொழி. 102

என்பது: அடியார்க்காகச் சைவாசாரங் கற்பித்ததொழிய வவனுக் கில்லையா மென்றது.

உண்மைநிலை முற்றும்.

---

## குரு தெரிசனம்.

ஆசா ரியமூர்த்தி யாகிச் சகலர்க்கு
மீச னெழுந்தருள்வா னென்றுமறை—பேசியதென்
மாயுரு வுருவனவன் மாயையுரு வாகிவரி
னேயானே நாச மினி. 103

என்பது: அரிபிரமரை யதிட்டித்துச் சிருட்டிதிதி நடத்தினாற் போல வென்றது.

வானந் திரண்டுருவாய் வாராது மற்றதுபோன்
ஞானமய மோருருவாய் நண்ணாது—மானுடர்க்குப்
போகமுடன் முத்தி யளிக்குமெனிற் பூரணத்துக்
கேகதே சம்வந்த தென். 104

என்பது: வானம் போலே வசேதனமல்ல, விச்சாக் கிரியைக ளநாதியே சிவனுடம் பென்றது.

கேட்டா ரபக்குவமோ கேட்டபொருள் சொல்லுதற்கு
மாட்டாம லோவாக்கின் வாராதோ—நாட்டரிய
ஞான மடந்தையுட னுல்வர்க்குங் கேட்டுய்ய
மோனமுட னீயிருந்தன் முன். 105

என்பது: கேட்டார்க்குச் சர்வ சந்தேகங்களுந் தீருகையா லிருந்த தென்றது.

ஒன்றுபதி யொன்றுபசு வொன்று ரருண்மாயை
யொன்று ணவமென் றுரைத்தனையே—யன்றெனுயி
ரன்னுய்மெய் கண்டாயிவ் வைய மகலவரு
ணின்னும மானபடி நீ. 106

என்பது: உயிர்களுக் குடலெடுத்தபின்பு பேருண்டானற் போல வென்றது.

குரு தெரிசனமுற்றும்.

சதமணிக்கோவை பொழிப்புரையுடன் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---






உ

சிவமயம்.

திருக்கயிலாய பரம்பரைத்

## திருவாவடுதுறை யாதீனத்து ஞானதேசிகர்கள்.

---

1. ஸ்ரீலஸ்ரீ நமச்சிவாய தேசிகர்.
2. ,, மறைஞான தேசிகர்.
3. ,, அம்பலவாண தேசிகர்.
4. ,, உருத்திரகோடி தேசிகர்.
5. ,, வேலப்ப தேசிகர்.
6. ,, குமாரசுவாமி தேசிகர்.
7. ,, பிற்குமாரசுவாமி தேசிகர்.
8. ,, மாசிலாமணி தேசிகர்.
9. ,, இராமலிங்க தேசிகர்.
10. ,, வேலப்ப தேசிகர்.
11. ,, பின் வேலப்ப தேசிகர்.
12. ,, திருச்சிற்றம்பல தேசிகர்.
13. ,, அம்பலவாண தேசிகர்.
14. ,, சுப்பிரமணிய தேசிகர்.
15. ,, அம்பலவாண தேசிகர்.
16. ,, சுப்பிரமணிய தேசிகர்.
17. ,, அம்பலவாண தேசிகர்.
18. ,, சுப்பிரமணிய தேசிகர்.
19. ,, வைத்தியலிங்க தேசிகர்.
20. ,, அம்பலவாண தேசிகரவர்கள்.

---

ஸ்ரீ வித்யா பிரஸ், கும்பகோணம்.